# தெய்வத்தின் குரல்

முதல் பகுதி





வானதி பதிப்பகம்
13. தீனதயாளு தெரு
தி.நகர். சென்னை-17.

SRI SEETHARAMA DHARMA PARIPALANA SABHA
(C-41,11A CROSS THILLAINAGAR TRICHY PIN:620 018)

In fond remembrance of happy participation in

MAHA PERIYWAL JAYANTHI CELEBRATIONS, 1996

and with blessings,

PRESIDENT

Sri Ramajayam

# தெய்வத்தின் குரல்

ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதீச்வர
ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராசாரிய
ஸ்வாமிகளின் அருள்வாக்குகள்

## முதற் பகுதி

J. Ramani



வானதி பதிப்பகம்
13. தீனதயாளு தெரு
தி.நகர், சென்னை-17.

முதற் பதிப்பு : ஏப்ரல், 1976
இரண்டாம் பதிப்பு : ஆகஸ்ட், 1977
மூன்றாம் பதிப்பு : மே, 1979
நான்காம் பதிப்பு : மே, 1981
ஐந்தாம் பதிப்பு : மே. 1983
ஆறாம் பதிப்பு : செப்டம்பர், 1985
ஏழாம் பதிப்பு : மார்ச், 1988
எட்டாம் பதிப்பு : ஆகஸ்ட், 1990
ஒன்பதாம் பதிப்பு : டிசம்பர், 1992
பத்தாம் பதிப்பு : செப்டம்பர், 1994



திருநாவுக்கரசு தயாரிப்பு

விலை: ரூ. 100.00

Pr nted at : Nathan & Company, Madras – 42

உள்ளே விரியும் வாக்குகளை வருஷித்த பேசும் தெய்வம் இன்று பெரும்பாலும் மோன தக்ஷிணாமூர்த்தி யாகிவிட்ட போதிலும், இதே தெய்வக் குரலை இன்றும் ஞானிலமெங்கும் நலமுறப் பொலிவித்து வரும் திவ்ய புருஷர் ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதிகளான ஸ்ரீ ஜயேந்திர ஸரஸ்வதி சங்கராசாரிய ஸ்வாமிகளுக்கு அனந்தம் அஞ்சலிகளோடு,

ஸமர்ப்பணம்.

# அன்பும் அருளும்

குடும்பத்தில் ஏதாவது பிரச்னைகள் எழுமானால் குடும் பத் தலைவன் முயன்று அந்தக் குடும்பத்தில் நிம்மதி நிலவச் செய்வதைப் பார்க்கிறோம். நாட்டில் அரசியல் பிரச்னை களோ கொந்தளிப்போ எழுமானால் நாட்டுத் தலைவர்களும் அரசாங்கமும் தலையிட்டு அதனை அடக்குவதைக் காண்கி றோம். யுகதர்மம் சீர்குலைந்து உலகத்துக்கே உபாதை ஏற்ப டின் யார் தீர்த்து வைக்க முடியும்?

தெய்வத்தினால் மட்டுமே அது இயலும். தெய்வம்தான் மனித வடிவமெடுத்து நாயன்மாராகி உலகத் துன்பங்களைத் தீர்க்க முடியும்.

இன்று அவதார புருஷராக—நாயன்மாராக—உலக குரு வாக ஒளிரும் ஸ்ரீ காஞ்சிப் பெரியவர்கள்தாம் குடும்பத்துக் கும், நாட்டுக்கும், உலகுக்கும் ஏற்படும் சந்தேகங்களுக்கு— சங்கடங்களுக்கு மார்க்கம் சொல்ல வல்லவர்களாக, துன்பத் தைப் போக்க வல்லவர்களாகத் திகழ்கின்றார்கள்.

பெரியவர்களிடம் போனால் நம் இன்னல்கள் இன்பமய மாகின்றன. மனத்துக்கு மகிழ்ச்சி கிடைக்கின்றது. அந்த தெய்வ சந்நிதானத்தின் முன் நின்றால் ஒரு சாந்தி கிடைக்கின் றது. குளிர் பூந்தென்றல் நம் மேனியில் படுவது போன்ற உணர்ச்சி ஏற்படுகின்றது. வாழ்க்கையில் ஒரு துணிவு, தெம்பு, தன்னம்பிக்கை ஏற்படுகின்றது. இவை அவர்கள்பால் முழு ஈடுபாடு கொண்டவர்கள் தினசரி உணரும் உண்மை, (கடவுளிடமும் பெரியவர்களிடமும் முழுபக்தி கொண்ட

கூட்டம் மட்டுமே அந்தச் சந்நிதானத்தின் முன்பு இத்தகைய இன்பானுபவ உணர்வையும் உரத்தையும் பெற முடியும்).

பெரியவர்கள் உலக மக்களிடம் மிகுந்த அன்பு கொண்டவர்கள். தம்மை அடக்கிக் கொண்டு, தம்மைச் சுருக்கிக் கொண்டு, தம்மை உருக்கிக் கொண்டு, உலக மக்களின் துயர்களை எல்லாம் அடக்குபவர்கள், துன்பத்தைத் துரத்துபவர்கள். உலக மக்களின் நன்மைக்காகவே நாழிகை தோறும் பூஜை செய்பவர்கள்.

அவர்கள் செய்த தவமும்—செய்து கொண்டிருக்கிற தவமும், பெற்ற அருளும்—பெற்றுக் கொண்டிருக்கிற பேரருளும், பேணிக் காக்கும் பேரறமும் இந்த உலகத்தை வளப்படுத்திக் கொண்டிருப்பதைக் கண்கூடாகக் காண்கிறோம்.

பெரியவர்கள் பல்துறை அறிவும் பல்கலைச் செறிவும் பெற்றவர்கள். அவர்கள் நடமாடும் தெய்வம் மட்டுமல்ல, நடமாடும் பல்கலைக் கழகமும்கூட. அந்தப் பல்கலைக் கழகத்திலிருந்து மக்கள் நல் அறிவு பெற, நாடு நலம் பெற, உலகம் உய்வு பெற, எத்தனையோ அறிவு மணி மொழிகள் அறிவு உரை வடிவில் உதிர்ந்துள்ளன.

மனித வாழ்வை வளப்படுத்தவும், புனிதப்படுத்தவும் அவர்கள் வேதங்களிலிருந்தும் இதிகாச புராண சாஸ்திரங்களிலிருந்தும் எத்தனையோ மேற்கோள்கள் காட்டிப் பல்வேறு சந்தர்ப்பங்களில் உரையாற்றியிருக்கிறார்கள். அவ்வப்போது எழுந்த குரல் காற்றோடு கலந்து போகாமல், என்றும் நின்று நிலவும் வண்ணம் தெய்வத்தின் குரலாகி அவை அச்சு ஏட்டில் பதிவாகிச் சிறந்த நூலாக இப்பொழுது வடிவெடுத்துள்ளது. சொர்ணமூர்த்தியின் எண்ண வடிவங்களே கருத்து வண்ண வடிவங்களாகியுள்ளன.

ஆசாரிய சுவாமிகளின் அன்பு மொழிகளில் அருள் கனிகிறது. புராணங்களையோ— இதிகாசங்களையோ— வேதங்களையோ— தர்ம சாஸ்திரங்களையோ அனைவராலும் முழுதும் படிக்க முடியாது. பெரியவர்கள் அவற்றை எல்லாம் முழுதும் படித்து நமக்குச் சாறு பிழிந்து தருவது

போல் இந்நூலில் தந்துள்ளார்கள். அத்தனையும் அருட்கனிச் சாறுகள்.

இந்து மதத்தின் பெருமையையும், நமது பண்பாட்டின் அருமையையும், கடவுளின் வடிவங்களையும், வேதசாரங்களையும், வாழ்வியலின் இலக்கணங்களையும், சகல துறைச் சாஸ்திரங்களையும், தத்துவ உண்மைகளையும், பாமரரும் புரிந்துகொள்ளும் வண்ணம் இந்நூலில் அவர்கள் குரல் உரை வடிவில் ஒலிப்பதைக் கேட்கலாம்; படிக்கலாம்.

மொத்தத்தில் இது ஓர் அருட்பெரும் அறிவுக் களஞ்சியம்; ஞானக் களஞ்சியம்.

இதைப் படித்தால் பாமரன் பண்டிதனாகலாம். அறிஞன் பேரறிஞனாகலாம். மனிதன் தெய்வமாகலாம். இந்தத் தெய்வத்தின் குரலை, 'பல டேப்'களிலிருந்தும் 'கல்கி' பத்திரிகையின் அருள் வாக்குகளிலிருந்தும், பல்வேறு ஸ்ரீ முகங்களிலிருந்தும், பல்வேறு சமயங்களில் பெரியவர்கள் ஆற்றிய உரைகளிலிருந்தும் தொகுத்தும் எடுத்தும் எழுதியவர் காஞ்சிப் பெரியவர்களின் அன்பையும் ஆசியையும் பெரிதும் பெற்ற ஆசிரியர் திரு.ரா. கணபதி அவர்கள்.

திரு.ரா. கணபதி அவர்கள் எதையும் ஒழுங்காகச் செய்பவர்கள், செய்ய வல்லவர்கள். ஸ்ரீ காஞ்சிப் பெரியவர்களின் அருள் வாக்குகளை மிகுந்த அன்போடு, அக்கறையோடு, பொறுப்புணர்ச்சியோடு பகுதி பகுதியாகப் பொருள் வரிசையில் தொகுத்துத் தந்துள்ளார்கள். இதைப் பெரும் பாக்கியமாகக் கருதி வானதி பதிப்பகத்தில் பக்தி உணர்வோடு, முழு ஈடுபாட்டோடு, உற்சாக உணர்ச்சியோடு வெளியிட்டுள்ளேன்.

இந்த நல்வாய்ப்பை, ஸ்ரீ மகா திரிபுரசுந்தரி சமேத சந்திரமௌளீசுவரர் அருட்கடாட்சம் என்றே கருதுகிறேன். ஸ்ரீ காஞ்சிப் பெரியவர்களின் அன்பையும், அருளையும், கருணை உள்ளத்தையும் என்னால் என்றுமே மறக்கமுடியாது. தினம் தினம் நான் போற்றி வணங்கும் தெய்வம் ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரசுவதி சங்கராசாரிய ஸ்வாமிகள்

ஆவார்கள். என் இதய அஞ்சலியை காஞ்சிப் பெரியவர்களின் காலடிகளில் சமர்ப்பிக்கிறேன்.

தெய்வத்தின் குரலாகிய இந்நூலை வானதி பதிப்பகத்தில் வெளியிட ஆசி வழங்க வேண்டுமென வேண்டி, நடமாடும் தெய்வமாகத் திகழும் உற்சவ மூர்த்தியான ஸ்ரீ புதுப் பெரியவர்களுக்கு ஓராண்டுக்கு முன்பு கடிதம் எழுதினேன். அச்சமயம் ஜாம்ஷெட்பூரில் முகாமிட்டிருந்த ஸ்ரீ புதுப் பெரியவர்கள் உடனே இதனை அற்புதமாக வெளியிடும்படி ஆசியருளினார்கள். பெரிதும் ஊக்குவித்தார்கள். கடவுளின் கிருபையாலும், பெரியவர்களின் ஆசியாலும், உங்கள் அன்பாலுமே இந்நூல் இத்துணைச் சிறப்பாக வெளிவந்துள்ளதென உணர்கிறேன்.

ஆசாரிய சுவாமிகளின் அருள் மொழிகள், பொன்னேட்டில் பதிக்கத்தக்கவை. ஆனால் பசுந்தாளில்தான் பதிப்பித்துத் தந்துள்ளேன்.

குருபக்தியோடு அவன் தாளை வணங்கியே பதிப்பித்துத் தந்துள்ளதால், எளியேனின் பதிப்பை, எழில் பதிப்பாகத் தமிழ் மக்கள் ஏற்றுக்கொள்வார்கள் என்ற நம்பிக்கை எனக்கு உண்டு.

இந்தத் தெய்வத்தின் குரல் உங்கள் இல்லங்களில் எல்லாம் ஒலித்துக் கொண்டேயிருக்கட்டும்!

அன்பு, அருள் ஒலிகள் நிரம்பிய இந்நூல் இவ்வளவு அழகாக உருவாகியதற்குக் காரணம் தொகுப்பாசிரியர் திரு. ரா. கணபதி அவர்களே. அவர்களுக்கு எவ்வளவு நன்றி சொன்னாலும் தகும். இந்த அருள் வாக்குகளில் பல கல்கி பத்திரிகையில் வெளியானவை. கல்கி காரியாலயத்தாருக்கு நன்றி. இந்நூலை நல்ல முறையில் அச்சிட்டுத் தந்த அச்சகத்தாருக்கும் அச்சகத் தோழர்கள் அனைவருக்கும் நன்றி. வணக்கம்.

**ஏ. திருநாவுக்கரசு**
வானதி பதிப்பகம்

# முதற்பதிப்பு முகவுரை (1976)

“தெய்வத்தின் குரல்” என்று பெயரிட்டிருக்கிறோம். ஆனால், இம்மொழிகளை இயம்பியவர், தம்மை தெய்வ மாக வைத்தா பேசியிருக்கிறார்? தானே தெய்வமாகப் பேசுவ தா்க கீதாசாரியன் சொன்னானே, அப்படியா இவர் பேசியிருக் கிறார்? தெய்வக் குமாரனாகப் பேசுவதாக இயேசுநாதர் சொல்லிக் கொண்டாரே, இன்னும் பல மத ஸ்தாபகர்களும் தெய்வக் கட்டளைகளையே தாங்கள் வெளியிடுவதாகச் சொன்னார்களே, அந்த முறையிலா இந்நூல்வழி பேசுபவர் பேசியிருக்கிறார்? “எனதுரை தனதுரையாக” என்று சம்பந்த ரும், “தன்னைத் தான் பாடி” என்று நம்மாழ்வாரும், இதே ரீதியில் மற்றும் பல அநுபூதிமான்களும் கூறுவதுபோல் இவர் எங்கேனும் கோடியாவது காட்டியிருக்கிறாரா? இல்லவே இல்லை. தம்மைத் தெய்வமாகக் காட்டிக் கொள்ளாதது மட்டுமில்லை; தாம் தெய்வத்தின் குரலை வெளியிடும் கருவி என்ற ரீதியில்கூடச் சொல்லிக் கொள்ளவில்லை. அது மட்டு மல்ல, மகானாக மேம்பாடுற்ற மனிதராகக்கூட அவர் தம்மை வெளிப்படுத்திக் கொள்ளவே இல்லை. தோஷங்கள் நிறைந்த நம்மில் ஒருவராக, வேஷங்கள் நிறைந்த நம்மில் ஒருவராகத்தான் தம்மை ஆங்காங்கு வர்ணித்துக் கொள்கிறார்.

ஆனால், இதைவிடப் பெரிய வேஷமில்லை என்று அடியார்கள் அறிவர். லௌகிக வேண்டுதல்களிலிருந்து பர ஞானம் வரையில் சகலவிதமான அநுக்கிரகங்களையும் எண் ணற்ற அடியாருக்கு வழங்கி வரும் ஸ்ரீ காஞ்சிப் பெரியவாளை பக்தருலகம் பரமாத்மாவாகவேதான் அறிந்திருக்கிறது.

ஆனால், இங்கே இந்நூலில் இப்பரமாத்மாவின் அற்புத அநுக்கிரகச் செயல்கள் விரியவில்லை. வாக்குதான் விரிகிறது. நம்மில் ஒருவராக அவர் தம்மைச் சொல்லிக் கொண்டாலும், ஆழ்ந்து ஊன்றிப் படிக்கும்போது இவ்வாக்கே அவரது பரமாற்புத அநுக்கிரகமாக நெஞ்சில் மேவுகிறது. இது தெய்வத்தின் குரல்தான் என்று நம்மை உறுதியாக உணரச் செய்கிறது.

எதனால்?

நமக்கென்று தனிக்கருத்துக்கள், கொள்கைகள் உள்ளன. அதுதான் நம் தனித்தன்மையை உண்டாக்கும் தனி மனத்தின் லட்சணம், அவலட்சணமும்கூட. ஆனால் இந்தத் தொள்ளாயிரம் பக்கங்களை நீங்கள் படிக்கும்போது எங்கேனும் இதைப் பேசியவருக்கென்று ஒரு தனிக்கொள்கை, சித்தாந்தம், அபிப்பிராயம் இருப்பதாகத் தோன்றுகிறதா? எப்பேர்ப்பட்ட சம பாவம்! நடுநிலை! இப்படியும் ஒரு திறந்த மனம் இருக்க முடியுமா? எதையோ தனது என்று நிலைநாட்டிவிட வேண்டும் என்ற தனி மனித முனைப்பே இல்லாமல், எதைச் சொன்னாலும் அதற்கு இருக்கக்கூடிய ஆட்சேபணைகளையும் தயங்காமல் ஆய்ந்து, அலசி அலசிப் பார்த்துப் புட்டுப் புட்டு விளக்கும் தெளிவினை என்னென்பது? இவர்கள் ஓர் மதத் தலைவராயினும், மத ஸ்தாபகர்களைவிட மஹாகவியின் நோக்கும் வாக்கும்தான் உள்ளதை உள்ளபடி கண்டு உரைக்கும் என்கிறாரே (பக். 433), அப்படிச் சொல்வது இவர்களது திறந்த மனதையும் காட்டுவதல்லவா? இன்னோரிடத்தில் ஆதி சங்கரரின் அத்வைதம் உள்பட எம்மதமும் அதன் சித்தாந்தச் சிறப்பால் விசேஷமாக வளர்ந்து விடவில்லை என்று ஆணியறைந்தாற்போல் சொல்கிறாரே! (பக். 153-9.) இது எப்பேர்ப்பட்ட திறந்த உள்ளத்தைக் காட்டுகிறது!

ஸத்தியம் ஒன்றே குறிக்கோளாக, தனி மனித அபிப்பிராயத்தை அறவே தொலைத்துவிட்டு, அவர் தமது தூய திரு உள்ளத்தைப் பூரணமாகத் திறந்து விட்டிருப்பதால், மகத்தான கோபுர வாயில் வழியாக மாருதம் முழு வீச்சுடன் பாய்வதே

போல, அவர் மூலம் மெய்ப்பொருளின் திருக்குரலே பாய்கிறது. அதனால்தான் இது தெய்வத்தின் குரலாக இருக்கிறது.

அநுக்கிரகம் செய்வதில் பரம உன்னதமாக இருப்பவரே, உபந்நியாசம் செய்யும்போது, உரையாடும்போது பரம எளியராகிவிட, அந்த எளிமையில் 'தனித்துவம்' என்பதே இல்லாமல் ஆகிவிடுவதால், 'தனியொரு தத்துவமே', சத்தியமே அவர் மூலம் பேசி விடுகிறது.

அவர் ஏன் இப்படி நம்மோடு சேர்ந்து எளியராகி நிற்கிறார்? ஸத்தியமே அவர்களது லக்ஷியம் என்று சொல்லிவிட்டு, அவர்களே தமது பரமேசுவரத்துவத்தை மறைத்துப் பரம எளியர்போல் பொய்யாக நடிக்கிறார் என்றால் பொருந்தவில்லையே! இதற்கும் இவ்வாக்கிலேயே விடை இருக்கிறது. ஆதிசங்கரர் அம்பிகையைத் துதிக்கும்போது தம்மைக் கடையரில் கடையராகச் சொல்லிக் கொண்டு, ''என்னையும் கூடக் கடாக்ஷியம்மா!'', ''எனக்கும்கூட உன் திருவடியைத் தருவாய், தாயே!'' என்றெல்லாம் விநய வடிவாக வேண்டுவதைச் சொல்லும் பெரியவாள், நாம் எப்படிப் பிரார்த்திக்க வேண்டும் என்று நமக்குக் கற்றுக் கொடுப்பதற்காகவே, பரமேச்வராவதாரமான பகவத்பாத சங்கரர் நம்மில் ஒருவராகத் தம்மை வைத்துக் கொள்கிறார் என்று விளக்குகிறார். விளக்கம் தருபவரின் எளிமைக்கும் இதுவே விளக்கு. அவதார புருஷர்களும் எப்படி சாமானிய மானுடர்களோடு சேர்ந்து நிற்கிறார்கள், எதற்காக அப்படி நிற்கிறார்கள் என்பதற்கெல்லாம் நூலின் உள்ளே (பக் 652-3, 887-8 ஆகியவற்றில்) விரியும் விளக்கம் இப்படி விளக்குபவரையும் விளக்கி வைக்கிறது.

**எல்லா விளக்கும் விளக்கல்ல சான்றோர்க்குப்**
**பொய்யா விளக்கே விளக்கு**

-என்ற தமிழ் மறைப்படி, இந்த எளிய சான்றோரின் திருவாய் வழியே சத்திய தீபமே சுடர் வீசுகிறது; அதாவது தெய்வத்தின் குரலையே கேட்கிறோம்.

இங்கே 1932-லிருந்து சுமார் நாற்பது ஆண்டுகளாக ஆசான் அருளிய மொழிகளைத் தொகுத்துத் தந்திருக்கிறோம்.

1973 தொடக்கத்தில் அவர்கள் சிவாஸ்தானத்தில் நீண்ட கால வாஸம் தொடங்கிய வரையில் அருளிய வாக்குகள் இதில் உள்ளன. இதன்பின் அவர்கள் மோனம் விட்டுப் பேசியதே அபூர்வம். அப்படிப் பேசியதிலும் எதுவுமே இந்நூலில் சேர்க்கப்படவில்லை. இதை இங்கே குறிப்பிடக் காரணம், நூலிலுள்ள சில கருத்துக்கள் வெகு சமீப கால நடப்புகளுக்குத் தொடர்புள்ளதாகத் தோன்றும்; ஆனால் அவ்விதமல்ல எனத் தெளிவுபடுத்தவே.

நாற்பது ஆண்டு என்ன, நாற்பது யுகமானாலும் தெய்வத்தின் குரல் மாறுவதே இல்லை என்பதை அதிசயிக்கத்தக்க வண்ணம் வெகு அழுத்தமாக உணர்கிறோம். உலகியல் விஷயங்கள் மாறும்; மனித மனமும் பரிணமிக்கப் பரிணமிக்க அபிப்பிராயங்கள் மாறும். ஆத்மிக தெய்விக விஷயங்கள் மாறுவதில்லை. ஆயினும் மாறாத இவ்விஷயங்களை அணுகுபவர் முதிர முதிர, அவை குறித்தும் ஒருவரின் அபிப்பிராயங்கள் மாறுகின்றன. இந்தக் கருத்து மாற்றத்தை, அதனால் ஏற்படக்கூடிய முரண்பாட்டை (inconsistency)க் கண்டு பயப்படாமல், அவ்வப்போதும் தமது மனம் உள்ள பக்குவ நிலைக்குப் படுகிற உண்மையைக் கள்ளம் இன்றிச் செப்புவதே மாமனிதர்களின் சிறப்பு. ஆனால் பெரியவாள் வாக்கின் விசேஷம்தான் என்னென்பது! ஆதியிலிருந்து இன்றுவரை அவர் ஒரு கருத்தைக்கூட மாற்றிக் கொள்ள வேண்டியிருக்கவேயில்லை. 1972-ல் சொல்கிற அதே விஷயங்கள் வார்த்தைக்கு வார்த்தை 1932-ல் கூறியிருக்கிறார்! இது மேன்மேலும் முதிரத் தைரியமின்றி, ஒன்றையே வீம்பாகப் பற்றியிருப்பதல்ல! இதற்கு முற்றிலும் மாறாக அன்றே தம் எளிமையால் பூரண முதிர்ச்சியை, பக்குவ சிகரத்தை அவர் எய்தி, அவரது பழுத்த பழமான மனத்தில் ஸத்ய ரஸமொன்றே முற்றிலும் நிறைந்து விட்டதால், அதில் மாறுதலுக்கு இடமே இல்லாமலாகிவிட்டது. லௌகிகம் என்பதும் இங்கு ஆன்மிகத்துக்கு அநுசரணைதான் என்பதால், ஆன்ம விஷயங்கள் மட்டுமின்றி லௌகிகத்திலும்கூட அவர் எள்ளத்தனையேனும் மாறுபட்ட கருத்துக்களைத் தெரிவிக்க வேண்டிய பிரமேயம் ஏற்படவேயில்லை. என்றும் மாறாததே

சத்தியம் என்ற லக்ஷணப்படி, இங்கு விரிவதைவிட சத்திய வாக்கு எங்கும் காணக் கிடைக்காது.

ஸ்ரீ பெரியவாளின் உபந்நியாசங்கள் பல ஏற்கெனவே நூல்களாக வந்திருக்கின்றன. அவற்றுக்கும் ''தெய்வத்தின் குரலு''க்கும் உள்ள மிகப் பெரிய வித்தியாசம், இதுவரை தனித்தனியாக ஓரொரு சந்தர்ப்பத்தில் அவர்கள் ஆற்றிய உரைகள் தனிக் கட்டுரைகளாகவே வெளிவந்துள்ளன. இங்கேயோ ஒரே பொருள் குறித்து அவர் பல்வேறு உபந்நியாசங்களிலும், ஸ்ரீ முகங்களிலும், அறிக்கைகளிலும், தனிப்பட்ட உரையாடல்களிலும் வெளியிட்டுள்ள கருத்துக்கள் யாவும் ஒரு தலைப்பின் கீழ் தொகுத்துத் தரப்படுகின்றன. ஏற்கெனவே வெளியான நூல்கள், பத்திரிகைக் குறிப்புக்கள், கட்டுரைகள், 'டேப்'கள், அயல்நாட்டினர் பலருக்கு அளித்த பேட்டிகள் ஆகியவற்றிலிருந்தும், அதோடு மேடைப் பிரசங்கமாக அல்லாமல் ஒரு சில அடியாரிடை அவர் அகஸ்மாத்தாக ஆற்றிய மகாப்பிரசங்கங்கள், தனிப்பட்டவர்களுக்குத் தந்த சந்தேக விளக்கங்கள், சம்பாஷணைகள் ஆகியவற்றிலிருந்தும் செய்யப்பட்ட தொகுப்பே இது.

இதில் சில உரைகளைப் படிக்கும்போது, அது ஒரு குறிப்பிட்ட சந்தர்ப்பத்திலேயே ஆற்றப்பட்டதாக உட்சான்றிலிருந்து தோன்றும். ஆனாலும் இப்படிப்பட்ட உரைகளிலும் கூடப் பிற சந்தர்ப்பங்களில் அவர்கள் இதே பொருள் பற்றிக் கூறியனவும் நெய்யப்பட்டுத்தான் இருக்கின்றன. குறிப்பிட்ட சந்தர்ப்பம் என்று காட்டுகிற வாசகங்களை நீக்காததற்குக் காரணம், அந்தச் சந்தர்ப்பத்தைச் சொல்வதால் ஒரு ஜீவகளை, ஒரு மனநெருக்கம் உண்டாவதுதான்.

சுலபத்தில் சுலபமாக, மதுரத்தில் மதுரமாகப் பேச்சு மொழியில் பெரியவாள் கூறுவதைக் கறந்த பால் கறந்தபடி தரவேண்டும் என்பதே உத்தேசம். ஆங்கிலத்தில் வெளியான கட்டுரைகள், பேட்டிகள் ஆகியவற்றையும் முடிந்த மட்டில் அவர்களே தமிழில் எப்படிப் பேசியிருப்பார்களோ அப்படித்தான் ஆக்கி ஆங்காங்கு நுழைய விட்டிருக்கிறேன். அவர்களது வாய்மொழி வரும் பேச்சு மொழியின்பத்துக்காகவே, ''அதுகள்'', ''உசத்தி'', ''ரொம்ப'' போன்ற வார்த்தைகளை

இலக்கணப்படுத்தாமலே கொடுத்திருக்கிறேன். அப்படியும் எங்கேயோ சில இடங்களில் மிகவும் இலக்கணத் தமிழாக இருக்கிறதே என்று தோன்றலாம். இதற்குக் காரணம் பெரிய வாளே எப்போதாவது உபந்நியாசத்தினிடையே செந்தமிழில் சிறிது நேரம் பேசுவார்கள். மகாநாடுகளுக்கு அனுப்பும் செய்தி, புத்தகங்களுக்கான ஸ்ரீமுகம், பத்திரிகைகளுக்கு விடும் அறிக்கை இவற்றிலும் இலக்கண மொழியையே கையாள்வார்கள். இவற்றிலிருந்து எடுத்துக் கோத்த பகுதிகள் மற்றவற்றிலிருந்து மாறுபட்டுத்தான் இருக்கும்.

தனிப்பட்ட உரையாடல்களில் உடனிருந்தோர் கூறுகிற சில அபிப்பிராயங்களைப் பெரியவர்கள் வாங்கிக்கொண்டு, அதன்மீது விளக்கங்களை அளிப்பார்கள். இந்நூலில் இவ்வித மான சம்பாஷணைகளிலிருந்து ஏராளமான குறிப்புக்கள் விரவலாகச் சேர்க்கப்பட்டுள்ளன. ஆனால், இவற்றில் உடனி ருப்போர் கூற்றுக்களின்மேல் பெரியவாள் பேசுகையில் அக் கூற்றுக்களும் பெரியவாளுடையதாகவேதான் இழைத்துத் தரப்படுகின்றன. அவரது திருவுளச் சம்மதமான ஒரு கூற்றை அவரது கூற்றாகவே சொல்வதில் தவறில்லை என்ற கருத்தில் இந்த சுதந்திரத்தை எடுத்துக் கொண்டிருக்கிறேன். மிகவும் கண்குத்திப் பாம்பாக இக்காரியத்தைச் செய்தபோதிலும் ஒரு சில தவறுதல்கள் நேர்ந்திருக்கலாம். இப்படி உதாரணமாக ஒன்று எனக்கே ''பிழைதிருத்தம்'' போடுவதற்காக எல்லா ஃபாரங்களையும் சேர்த்துப் படிக்கும் போது அகப்பட்டது. அதாவது, 219-ம் பக்கத்திலும், 265-ம் பக்கத்திலும் சிவாஜி க்ஷத்திரியர் அல்ல என்று பெரியவாளே சொல்வதாகத் தோன் றும். ஆனால் உண்மையில் வர்ணாசிரம தர்மம், மந்திர சப்தங்களின் சக்தி இவை பற்றி இந்நூலில் உள்ள கட்டுரை களில் (பக் 195-303) காணும் கருத்துக்களில் பல, அவர், காலஞ்சென்ற ஃபிலிப் ஸ்ப்ராட் ('ஸ்வராஜ்யா' ஆசிரியராக இருந்தவர்) என் மூலம் கேட்டனுப்பிய சந்தேகங்களுக்கு நெல்லூரிலும் ஓங்கோலிலும் தந்த விளக்கங்களேயாகும். இவற்றிடையேதான் சிவாஜி பிரஸ்தாவமும் வந்தது. சிவாஜி க்ஷத்திரியரல்ல என்பது ஸ்ப்ராட் தெரிவித்த கருத்து. அப்ப டியே வைத்துக் கொண்டாலும் என்று பெரியவாள் கூறி னாரே ஒழிய அதைத் தாம் ஏற்றதாகவோ மறுத்ததாகவோ

காட்டிக் கொள்ளவில்லை. ஆனால் இங்கே என் கவனக் குறைவால் அது பெரியவாளின் முடிவான கருத்தே என்பது போல் வெளியாகியுள்ளது. இப்படி வேறு ஓரிரு தவறுகளும் இருக்கலாம். இவற்றுக்காக வாசகர்களை மன்னிக்கக் கோரு வதுடன், பெரியவாளையும் அபசாரம் பொறுக்கப் பிரார்த் திக்கிறேன்.

இந்தத் தொகுப்பில் ஒவ்வொரு தலைப்புக் குறித்தும் ஏராள விஷயங்களை, எங்கெங்கோ உள்ளவற்றை, எப்படி எப்படியோ நினைவுபடுத்தி ஒருங்கிணைக்கச் செய்வதில் அவர்கள் புரிந்துள்ள திவ்வியாநுக்கிரஹத்தை எண்ணும் போது, மிகக் குறைவாகவே அடிசறுக்க வைத்திருப்பார்கள் என்றும் திண்ணமாக நம்புகிறேன். அந்தச் சறுக்கலும்கூட அகங்காரத்துக்குத் தரும் தண்டனை என்ற வெகுமானம் என்றே கொள்ளலாம்.

கூறியது கூறல் என்ற குற்றமும் சில இடங்களில் உள்ளது. ஆனாலும் ஓரிடத்தில் வந்ததாயிற்றே என்று இன் னோரிடத்தில் அதை எடுத்துவிட்டாலோ, ஏதோ பொக்கை விழுந்ததுபோல் வெற்றிடம் தட்டுவதைக் கண்டேன். இதை விடத் திருப்பித் திருப்பி வருவது சிலாக்கியம் என்றே புனருக்தி தோஷத்தை மனமறிந்து செய்திருக்கிறேன். தோஷமாக நினைத்தல்ல! எத்தனையோ விஷயங்களைத் திரும்பத் திரும்ப நினைக்கிறோம், பேசுகிறோம். பேசும் தெய்வத்தின் சில வாக்குகளை மீள மீளக் கேட்டால்தான் என்ன? அப்படியாவது அவை நெஞ்சுள் ஆழத் தோயட் டுமே!

★ ★ ★

**நூ**லில் வரும் உரைகளில் பெரும்பாலானவை 'கல்கி' யில் அருள் வாக்குகளாக வெளிவந்துள்ளவை. ஆயினும், பத்திரிகைகளின் தவிர்க்க முடியாததான பக்கக் கட்டுப்பாட் டால் இந்த அருள் வாக்குகளில் சில பகுதிகள் குறைக்கப்பட் டிருந்தன. இங்கே பூரண ரூபத்தில் இவை வெளியாகின்றன.

அது தவிர, சாஸ்திர சம்பிரதாயப்படியான சில விஷயங் களைப் பொது மக்களுக்கான பத்திரிகைகளில் வெளியிட

முடியாத ஒரு துர்ப்பாக்கியமான சூழல் நம் நாட்டில் நிலவு வதை ஒப்புக் கொள்ளத்தான் வேண்டும். துளிக்கூட பட்ச பாதமேயின்றி இவ்விஷயங்களைப் பெரியவர்கள் ஸாங்கோ பாங்கமாக அலசி விளக்கியிருந்தும்கூட, இவற்றை ஒரு 'பாபுலர் ஜர்ன'லில் வெளியிடுவதால் அநாவசிய சர்ச்சைகள் கிளம்பிப் பத்திரிகைக்காரர்களுக்குச் சிரமம் உண்டாகி விடுமோ எனத் தோன்றியதால் இவற்றைப் பிரசுரிக்க வில்லை.

ஆயினும் இன்று நம்மிடையே உள்ள மகாபுருஷர்களில் ஸ்ரீ பெரியவர்கள் மட்டுமே இந்த ஸநாதன சாஸ்திர நெறி களை விசேஷமாக வலியுறுத்துபவராதலால்—வேறு விதத் தில் சொல்வதானால், ஸ்ரீ பெரியவர்கள் இந்த ஸநாதன சாஸ்திர நெறிகளை மட்டுமே விசேஷமாக வலியுறுத்துபவரா தலால்—இவற்றை வெளியிடாதிருப்பது 'ஆசார்ய ஹ்ருதய'த் தைப் பூரணமாக, உள்ளபடி தெரிவிக்காததேயாகும் எனத் தோன்றியது. எனவேதான், எந்நாளும் நிற்கிற விதத்தில் இன்று அவர்களது வாக்குகள் நூலாக உருவாகையில், இப்படிப்பட்ட தர்ம சாஸ்திர விஷயங்களை நிறையச் சேர்த்தி ருக்கிறேன். ''வைதிக மதம்'' என்ற பகுதியில் வந்துள்ள பெரும்பாலான கட்டுரைகள் இப்படிப்பட்டனவே.

இங்கே பெரியவாளும் 'தமது கொள்கை' என்பதுபோல் விசேஷமாக வைதிக தர்ம சாஸ்திரங்களை வலியுறுத்துவதா கச் சொல்வது, தொடக்கத்தில் அவர்கள் ஸத்தியம் ஒன்றே லக்ஷியமாக எல்லா விஷயங்களையும் திறந்த உள்ளத்தோடு பார்த்து விளக்குவதாகச் சொன்னதற்கு முரணாகத் தோன்ற லாம். அப்படியல்ல. ஆய்ந்து பார்த்து அபிப்பிராயங் கொள் ளும் விஷயங்கள் மட்டுமின்றி, சாஸ்திர விஷயங்களில் நம்பிக்கையின்மீதே ஏற்றுக் கொள்ள வேண்டிய உண்மை களும் உள்ளன. இவற்றில் ஓரளவுவரைதான் பகுத்தறிவு ஆராய்ச்சி எடுபடும். அந்த அளவுவரை அசாத்திய தீரத்தோடு—எளிமைக்கே உரிய அதிசய தீரத்தோடு—நம் ஆசாரியப் பெருமான் திறந்த மனத்தோடு புட்டுப் பார்க் கிறார். ஆனால் நம்பிக்கையின்மீது ஏற்க வேண்டியவற்றில் இதே எளிமையால் பூரண சரணாகதி செய்து, இங்கே தமது அற்புத புத்தி தீக்ஷண்யத்தைச் சிறிதும் கொண்டு வருவ

தில்லை. 'ரிஷிகளும் ஆதிசங்கரரும் சொன்னால் அது அப்படியே சத்தியம்தான்' என்பதாக அவர்கள் வகுத்த நெறிகளையே வலியுறுத்துகிறார். இங்கேயும் ''தமது'' கொள்கை என்ற அபிமானத்தால் வலியுறுத்தவில்லை. தான் என்பதற்கே இங்கே வேலையில்லை. ரிஷிகள் சொன்னது, சகல ரிஷிகளின் ஸாரமாக வந்த ஆதிசங்கரர் ஆதரித்தது என்ற சரணாகதி நிலையிலேயே தர்ம சாஸ்திர விதிகளை, அமைப்புக்களை வலியுறுத்துகிறார்.

இங்கு ஒரு விஷயம் வலியுறுத்த வேண்டும். சாமானிய மாந்தர் போல ஸ்ரீ பெரியவாள் தர்ம சாஸ்திர நியதிகளை நம்பிக்கையுடன் ஏற்றது மட்டுமல்ல, அப்படி ஏற்றபின் அவற்றை அணுவணுவும் நடத்திக் காட்டிய செவ்வியால் அவை ஸத்தியமானவை என்று அநுபவ பூர்வமாக உணர்ந்தவர்கள் அவர்கள்.

இன்று அவர்களது தெய்வத் தன்மையை ஸர்வ தேசங்களிலும் உள்ளவர்கள் அறிந்திருக்கிறார்கள். ஏதுமறியா ஒரு பதின்மூன்று வயது பாலன்தான் திடுமென ஒருநாள் ஜகத்குரு சங்கராசாரியாராகி மடாதிபத்தியமும், பீடாதிபத்தியமும் பெற்றது மட்டுமின்றி, வாஸ்தவமாகவே தெய்வ மஹா சங்கரராயிருக்கிறார். இதன் மர்மம், அவதார ரஹஸ்யம் நமக்கு எட்ட முடியாததுதான். ஆயினும் ஓரளவு ஊகிக்கலாம். சற்றும் எதிர்பாராமல் ஒருநாள் தான் பீடாதிபதிகளாக நியமனமானதாக அறிந்த சிறுவன், முதலில் அஞ்சி நடுங்கவே செய்தான். ஆயினும் இது ஈச்வராக்ஞை என்று தெளிந்திருக்க வேண்டும். இல்லாவிடில் வேத வேதாந்த பரிசயமில்லாத ஒரு பள்ளிக்கூடப் பையனை ஏன் பூர்வாசாரியார் தம் வாரிசாக நியமிக்க வேண்டும்? ஸ்ரீ காமகோடி பீடத்தின், ஸ்ரீ சாரதா மடத்தின் அதிபதியாக இவர் இருக்க வேண்டும் என்பது இறைக் கட்டளைதான். அப்படியானால், அம்மடத்தின் கொள்கைகளைத்தானே இவர் பற்றியொழுக வேண்டும்? இங்கே சொந்தக் கொள்கைகளுக்கு ஏது இடம்? இதனை உணர்ந்துதான் அன்றே நம் ஆசாரியப் பெருமான், இம்மடத்தின் கொள்கைகளாக ஆதி சங்கரர் வைத்திருந்த வைதிக தர்ம சாஸ்திரங்களுக்கே சரணாகதி செய்துவிட்டார் போலும்! நம்பிக்கையின்மீதே அவற்றை ஏற்றிருப்பார். ஏற்

றது மட்டுமின்றி, அப்பழுக்கின்றி ஆசார நியதிகளை வாழ்க்கையிலே நடத்தினார். ஸத் பாத்திரமாயினும், அஸத் பாத்திரமாயினும் ஏதோ ஓரிடத்தில் ஒருவர் பூரண சரணாகதி செய்து ''தான் அறப்பெற்றால்'' அவரிடம் தானே தெய்விக சக்தி குடிகொண்டுவிடும் என்று அவர்கள் கூறுவதைப் பக்கம் 881-4ல் கேட்கலாம். இதற்கு ஓர் உயிருள்ள உதாரணமாக சாஸ்திரங்களுக்கே சரணாகதி செய்த ஸ்ரீ பெரியவாள் அளப்பரும் அநுக்கிரக சக்தி பெற்று தெய்வ புருஷராகி விட்டார். இதன்பின் அவர் நம்பிக்கையின்பேரில் எதையும் ஏற்க வேண்டியதில்லை. ஏனெனில் எந்த மர்ம சத்தியமும் அவர்முன் தன் உள்ளாழத்தைத் திறந்து காட்டிவிடும். ஆகையால் தாம் நம்பிக்கையால் ஏற்ற சாஸ்திரக் கோட்பாடுகளையே அவர் அநுபவத்தில் கொண்டுவந்து பிற்பாடு அநுபூதி சிகரத்திலிருந்து அவற்றின் ஸத்யத்துவத்தை உணர்ந்துதான் நமக்கும் எடுத்துரைக்கிறார் என்பதே உண்மை. இங்கே கொள்கைப் பிடிவாதம் என்பது லவலேசமும் இல்லை என்பதே உண்மை. ஸத்யத்தை ஸத்யமாகச் சொல்கிறார்; தம் கொள்கை என்பதற்காக ஒன்றை வாதிக்கவில்லை.



இந்நூலைப் பல பகுதிகளாகப் பிரித்திருப்பது பற்றிச் சில வார்த்தைகள்: பகுதி பகுதியாக சமயம், சமூகம், ஆத்மிகம், லௌகிகம், கர்மம், பக்தி, ஞானம் என்று அடியோடு பிரிந்திராமல் எல்லாம் ஒருங்கிணைந்த வாழ்வு (integrated life) தான் வேத தர்மம் காட்டுகிற வழி. பரம லௌகிகமும்கூட பரமாத்ம தத்துவத்துக்கு அழைத்துப்போக உதவுமாறு வகை தொகை செய்யப்பட்டிருப்பதே நம் மதத்தின் சிறப்பு. எனவே, இந்த முழு வாழ்வையே நமக்கு லக்ஷியமாக விளக்கும் நம் பெரியவாளின் அருள்வாக்கிலும் அத்வைதத்திலிருந்து அணு விஞ்ஞானம் வரை, அம்பிகையிலிருந்து அகத்து விஷயம்வரை எல்லாமும் கலந்துதான் வரும். ஆகவே, இங்கு பல பகுதிகளாகச் செய்திருக்கிற பாகுபாடு விசாலமான பங்கீடுதான் (broad division). ''அத்வைதம்'' என்ற பகுதியில் வரும் ஓரிரு கட்டுரைகள் ''கர்ம மார்க்கம்'' என்ற பகுதியில் வந்தாலும் பொருத்தம்தான். ''வைதிக மதம்'', ''பொதுவான தர்மங்கள்'', ''சமூக விஷயங்கள்''

என்ற பகுதிகளில் வரும் கட்டுரைகள் பரஸ்பரம் தொடர்பு டையனவே. ஒன்றையொன்று இட்டு நிரப்புவனவே.

விநாயகப் பெருமானுடன் சுக்லாம்பரதரம் குட்டிக் கொண்டவுடனே அடுத்து ''அத்வைதம்'' என்ற பகுதியைக் கொடுப்பதால், அத்வைதிகளாக அல்லாதாருக்கு ருசி குறையுமோ என்று முதலில் தோன்றிற்று. ஆனாலும் அத்வைத பரமாசாரியர்களின் அபராவதாரமேயான நம் பெரியவாள் வாக்குகளில் இதற்கு முதலிடம் தருவதே தர்மம் எனத் தெளிந்தேன். அவர்கள் பரம தாத்பரியமாக, ஸத்யமாகக் கூறுவதைத்தானே முதலிடம் கொடுத்துக் கௌரவிக்க வேண்டும்? 'அல்லாதார்' என்று நாம் ஏன் சிலரை நினைக்க வேண்டும்? அனைத்தும் தழுவும் அன்பினால் ''அல்லாதாரை''யும் அனைத்தும் தழுவும் அத்வைதத்தில் இழுத்து அணைக்கக் கூடியதன்றோ ஆசான் அருள்மொழி!

★ ★ ★

இந்நூலைப் படிப்பவர்கள் மிகவும் மகிழப்போகிறார்கள் என்பதில் ஐயமேதும் இல்லை. ஆனால் இது படித்து மகிழவேண்டிய நூல் மட்டுமில்லை, நடத்திக்காட்ட வேண்டிய விஷயங்கள் இதில் ஏராளமாக உள்ளன. இப்போதனைகளில் பலவற்றை ஏற்கெனவே பத்திரிகைகளிலும், புத்தகங்களிலும் நாம் படித்து ஆஹா என்று சந்தோஷப்பட்டுத்தான் இருக்கிறோம். ஆனால் எவ்வளவு தூரம் நடத்தப் பிரயாசை செய்தோம் என்று பார்த்தால் வெட்கப்பட வேண்டியதாகவே ஆகும். 238-40, 271-4, 283-6 ஆகிய பக்கங்களில் வேத ரக்ஷணத்துக்காக நாம் செய்யவேண்டியது பற்றி அவர்கள் கல்லும் கரையுமாறு முட்டிக் கொண்டிருக்கிறார்களே! இது முன்னரே பலர் கேட்டதுதானே! காரியத்தில் என்ன செய்தோம்? இவ்வளவு பெரிய காரியம்தான் என்றில்லை. வியாஸருக்கு வருஷத்தில் ஒரே ஒருநாள் உத்ஸவம் செய்யுமாறு அவர்கள் வற்புறுத்தியதை (பக். 589-90) நடைமுறையாக்கினோமா? இப்படிக்கூடத் தனிக் காரியமாக மெனக்கிடாமல், நாம் வழக்கமாக உண்ணுகிறபடி உண்ணும்போதே கோவிந்த

நாமத்துடன் விழுங்கும்படி (பக். 577) ஒரு குட்டி ஆக்ஞை இட்டார்களே, இதைக்கூட எவ்வளவு பேர் செய்கிறோம்? நேரிலே அவர்களே இருந்துகொண்டு சொன்ன போதே கேட்காதவர்கள் அச்செழுத்தில் படித்து அநுஷ்டானத்துக்குக் கொண்டு வருவோமா?

வெறும் பொழுது போக்காகவோ, தாற்காலிக ஆனந்தத் துக்காகவோ அன்றி, நம்மை மேம்படுத்துவதையே நோக்க மாகக் கொண்ட இந்நூலை வெளியிடுகையில், இந்தத் தாபத் தைத் தெரிவிக்காமலிருக்க முடியவில்லை.

எளியராக இவ்வுரைகளை ஆற்றிய அதே ஸ்ரீசரணர்கள் தாம், தமது உரை நம்முள் உறையுமாறு தம் திவ்விய மகிமையால் நம்மை உந்துவிக்க வேண்டுமெனப் பிரார்த் திக்க வேண்டியதுதான்.

★ ★ ★

இந்நூலில் இருப்பதை நீங்களே படித்துத் தெரிந்து கொள்ளப்போகிறீர்கள். நமது வேத வேதாந்த சாஸ்திரங்கள் மட்டுமின்றி, பர மதக் கோட்பாடுகள், மொழியியல், சிலா சாஸனம், கலாநுட்பம், சரித்திரம், பொருளாதாரம், கணிதம், விஞ்ஞானம்—குறிப்பாக அதில் பௌதிக சாஸ்திரம்— இவற்றில் ஸ்ரீசரணர்களுக்கு உள்ள தேர்ந்த ஞானத்தையும், இவை அனைத்தையும் இசைவுபடுத்துவதில் அவர்களுக் குள்ள திறனையும் வியப்பீர்கள். ஆனால் இத் தொகுப்பாசிரி யனுக்கோ இவை வியப்பூட்டவில்லை. கூர்த்த அறிவு வாய்ந்த ஒருவர் ஒப்பற்ற தூயவாழ்வும் வாழ்ந்து விட்டால் ஒருமுறை காதால் கேட்பதும், கண்ணால் பார்ப்பதும்கூட நீங்காது பதிந்துவிடுமாதலால் இதை ''மேதா விலாஸம்'' என்றே வைத்து விடலாம். இதற்குத் தெய்விகத்தை இழுக்க வேண்டியதுகூட இல்லை. எனவே, எனக்கு வியப்பூட்டுவது அவர்கள் பரம லௌகிகமான நுட்பங்களைக்கூட எப்படி அறிந்திருக்கிறார் என்பதுதான். பாலகனாகவே குருபீடத் துக்கு வந்து ஞானபாலனம் தொடங்கிவிட்ட இவருக்கு, வாத்ஸல்யத்தால் ஒருவனுக்கு ஏற்படும் குதூகலங்கள் (785),

அண்டை வீட்டானிடம் காரணம் இன்றி ஏற்படும் போட்டி (618), கன்னிகாதானம் செய்கிற பிதாவின் மனம் துடிக்கும் துடிப்பு (556-7) போன்ற விஷயங்கள் இத்தனை துல்லியமாகத் தெரிவதைப் பார்க்கும் போதுதான்—அதாவது, பரம லௌகிகத்தைப் பார்க்கும் போதுதான்—அவரது தெய்விகம் தெரிகிறது! இதற்குமேல் நூலில் இருப்பதை இங்கு சொல்ல வேண்டியதில்லை.

ஆனால் இதில் இல்லாததைச் சொல்லத்தான் வேண்டும்—உரையாற்றியவரை முற்றிலும் அறிவதற்கு! ஏனெனில் இதில் இருப்பதைவிடவும் பெரியது, இனியது, இதிலே இல்லாதது.

வேத வேதாந்தங்களிலும், அத்வைத சாஸ்திரங்களிலும், மந்திர சாஸ்திரங்களிலும், ஸம்ஸ்கிருத இலக்கியத்திலும் பெரியவாளுக்கு உள்ள பெருஞானத்தில் ஒரு சிறு வாய்க்காலே அவரது பொதுப் பிரஸங்கங்களிலும் சாமானியமான தனியாருடன் ஸம்பாஷணைகளிலும் இழிவது. இதுவே நமக்கு வியப்பூட்டுகிறதெனில் இதன் மஹா சமுத்திர விசாலம் வெளியாவது வித்வத் ஸதஸ்களிலும் பாஷ்ய பாடம் நடத்தும்போதும்தான் என்று இவற்றில் கலந்து கொள்ளும் மகாபண்டிதர்கள் கூறுகிறார்கள். அவ்விஷயங்கள் அறிஞர் பெருமக்களே கிரகிக்கக்கூடியதாதலின் இங்கு அவற்றைச் சேர்க்க வேண்டியதில்லைதான். ஆயினும் வருங்கால அறிஞர்களின் பொருட்டும், பெரியவாள் என்ற வைரமணியின் புலமைப் பட்டை உலகுக்குத் தெரியவும், இவ்விதமான அருள் வாக்குகளையும் பண்டிதர்கள் தொகுத்துத் தரவேண்டுமென்பது என் விருப்பம்; வேண்டுகோள்.

இந்நூலில் இல்லாத பெரிய விஷயம் இது. இனி இந்நூலுக்குள்ளேயே இருந்தும் இல்லாத இனிய விஷயத்துக்கு வருகிறேன். ஆம், இதற்குத் ''தெய்வத்தின் குரல்'' என்று பெயரிட்ட போதிலும், எழுத்துக்கள்தாம் உள்ளனவே அன்றிக் குரல் இல்லை. அச்சு மையில் வடித்த எழுத்துக்கள் அநுபவத்தில் வடித்த அந்த அமுதக் குரலுக்கு எப்படி ஈடாகும்?

சொல்லும், செயலும், சித்தமும் அடங்கிய அத்வைத வேந்தர், உரையாடும்போது உணர்ச்சி மயமானதுபோல், காவிய ரஸங்கள் அனைத்தும் கொந்தளிக்கத் தமது அங்க பாவங்களாலும் குரல் மாறுபாடுகளாலும் புனைகிற திவ்ய நாடகத்தை இங்கே காகிதத்தில் கறுப்பு இங்கியில் எப்படிக் காட்டுவது? ''நிறைந்த நிறைவு'', ''சாந்தி'', ''ஆனந்தம்'' ஆகிய ஓரிரு வார்த்தைகளை அவர்கள் ஊறி ஊறிச் சொல்கிற பாங்கிலேயே ஒரு உணர்ச்சிப் பிரபஞ்சம் (அல்லது உணர்வு கடந்த பிரபஞ்சம்) உண்டாகிவிடுமே! சுலோகங்களையும், செய்யுள்களையும் அவர் இசைக்கும் அழகு—ஆஹா! அர்த்த பாவம் ஒரு பக்கம் இருக்க, ஆலாபனையாக ஓர் இம்மிகூடப் போகாமலே அவற்றில் துளும்பும் ராகபாவத்தை என்னென் பது? பெரியரில் பெரியராகவும், நம்மிலே ஒருவராகவும், நம்மிலும் குழந்தையாக பச்சைப் பிள்ளையாகவும் அவரைக் காட்டுவது இந்த நாநயமும், அங்க பாவங்களும் அல்லவா! ''குழந்தை ஸ்வாமி'' என்று அவர் சொல்கிற சொகுஸிலேயே கந்தனும் கணநாதனும் குழைந்து வந்து நிற்பார்களே! ''பெரிய மலையை பாலக்ருஷ்ணன் தூக்கினான்'' (பக். 355) என்பதில் அவர்கள் ''பெரிய''வுக்குக் கொடுக்கிற அழுத்தம் கோவர்த்தன கிரியாகவே இருக்குமெனில், ''பால''வை நெளிக்கும் நெளிவில் கண்ணனின் பரம மதுரமும், அவனது அற்புதத் தியாக சேவையுமே சுருண்டு வந்துவிடும். ''ஞான சம்பந்தர் கசிந்து கசிந்து கண்ணீர் மல்கிக்கொண்டே'' (பக். 664) போனது இங்கே சில இங்கித் துளிகள்: ஆனால் நேரில் கேட்டாலோ நம் கண்களே கசிந்து துளிக்கும். ''லக்ஷ்மணன் மூர்ச்சித்தபோது ராமர் புலம்பினார்; சமுத்திர ராஜனிடம் ரௌத்ராகாரமாகக் கோபம் கொண்டார்'' (பக். 882) என்னும் போது முதல் ஒரு வாக்கியத்திலேயே பாச ராகவனைப் படம் பிடித்துக்காட்டி, மறுகணத்தில் மறு வாக்கியத்தில் வீர ராகவனை விசுவரூப தரிசனம் செய்வித்து விடுவாரே! பார்வதீ பரமேசுவரர்கள்—ஸநத் குமாரர் உரையாடல் (669-72) போன்ற சம்பாஷணைகள் வந்துவிட்டால் போதும், அற்புதக் கதாசிரியராகவும், வசன கர்த்தாவாகவும், நடிகர்களாகவும் அவரே ஆகி விடுவார்.

எல்லாவற்றுக்கும் மேலாக அன்பைப் பற்றிய பேச்சு வந்துவிட்டால், அடாடா, பிரேமையின் பூரணசந்திரனாகவே ஆகிக் குரலில் நிலவைப் பொழிந்துவிடுவார், இச் சந்திரசேக ரப் பெருமான். பிரிந்து தோன்றும் எல்லாவற்றையும் சேர்த் துக் கோத்து அன்பில் இழைக்கின்ற அவதாரம் அன்றோ? நம் நலனின் பொருட்டே அவர் சிற்சில சமயங்களில் வலிந்து கோபம் கொண்டு கூறிய வார்த்தைகள் இங்கு எழுத்திலும் சுரீல் என்று தைக்கும். சுள்ளென்று இருப்பதை உள்ளவாறே காட்டும் சக்தி உள்ள எழுத்துக்கு ஏனோ அவர் ஜில்லென்றி ருக்கும் ஸ்வபாவமான அன்பைக் காட்டத்தான் முடிய வில்லை! அம்பாள் என்கிற அன்பைப் பற்றி நினைத்த மாத்திரத்திலேயே ஆசார்யரது குரல் அந்த அன்பில் ஊறிக் கனத்துக் கொள்ளுமே! அந்தப் புனித கனத்தை இங்கே எப்படிக் கொடுப்பது? குமாரிலபட்டருக்கு முன் ஆசாரியாள் செய்த அன்பு உபதேசத்தால், உபந்நியாசம் கேட்போரை லேசிலும் லேசாக்கினாரே (656-61) அதில் லவலேசத்தை இங்கே காட்டமுடியுமா? பரமேசுவரன் சம்ஹார காலத்தில், 'அடக் குழந்தே! ரொம்ப அலைந்து திரிந்து களைத்து விட்டாயப்பா, கொஞ்சம் ஓய்வு எடுத்துக்கொள்' என்று சொல்வதாக உபந்நியசிக்கும்போது (பக். 803) அதைக் கேட்ட நமக்கு, 'இதோ, அந்தப் பரமேசுவரன் நமக்கு விச்ராந்தி தரவே பெரியவாளாக வந்து 'வா' என்று கூப்பிடுகி றான்! அவர் மடியில் மானஸிகமாக விழுந்து நம் பாரத்தை எல்லாம் தொலைப்போம்'' என்று தோன்றச் செய்தாரே, அந்த பாவம் அச்செழுத்தில் வருமா?

நேராக அவரே தம் திவ்யமான, நிர்மலமான, அந்தரங்க மான அன்பை நம்மிடம் கொட்டி, ''உங்களில் ஒருத்தனாகப் பழகிவிட்டதால் எனக்கே உங்களிடம் சிநேகிதம், ஸ்வாதீனம் வந்துவிட்டது'' (283), ''நான் நீங்கள் எல்லாம் ஒன்றுதான்'' (286), என்பது போன்ற அமர வாசகங்களை மொழிந்தபோது, நேரில் உண்டான உன்னத உணர்ச்சியில் சதகூறிட்ட ஒரு துகள்தான் இங்கு கிடைக்க முடியும்.

ஆனால், புஸ்தகம் என்று வந்துவிட்டால் இது தவிர்க்க முடியாதது. பின் இக் குறையை ஏன் சொல்ல வேண்டும்

என்றால், நீங்கள் முடிந்த மட்டில் மானஸிகமாவது அதைப் பூர்த்தி செய்துகொண்டு இந்நூலால் அதிகப் பயன் பெறுவதற் குத்தான்.

கல்கத்தாவுக்குப் போகிறோம். குளிப்பதற்காகக் குழா யைத் திருப்பிவிடுகிறோம். தண்ணீர் பீய்ச்சி அடிக்கிறது. அதுவே ஆனந்தமாகத்தான் இருக்கிறது. அப்போது குளிய லறைக்கு வெளியே வீட்டுக்காரர், ''இங்கே குழாய்த் தண்ணீர் முழுதும் கங்கையாக்கும்'' என்கிறார். உடனே வெறும் நீர் என்கிற அளவிலேயே முன்பு ஏற்பட்ட நம் ஆனந்தம் எப்பேர்ப்பட்ட தெய்விகமான பரிணாமத்தையும், அதனா லேயே விஸ்தாரமான பரிமாணத்தையும் பெற்று விடுகிறது? கங்கையின் சுழிப்பும், கொழிப்பும் குழாயில் இல்லாவிடி னும்கூட, ''கங்கா ஸ்நானம்'' என்றவுடன், ஓர் உயர்வு வந்துவிடுகிறதே! அப்படியேதான் வெறுமே இவ்வாக்கு களைப் படித்தாலும் மகிழத்தான் செய்வீர்கள். ஆனால் இதில் ஒவ்வோர் எழுத்தும் அன்பு கங்கையின் பூஞ்சிதறல் என் பதை மனஸில் வாங்கிக் கொண்டாலோ அந்த மகிழ்ச்சி திவ்யாநுபவமாகிவிடும். இப்படியே இந்நூலில் ஸ்நானம் பண்ணுங்கள்; இதனைப் பானம் பண்ணுங்கள்; தியானம் பண்ணுங்கள்!



பெரியவாளின் அமரத்துவம் வாய்ந்த அமுத வாக்கு களைப் புத்தக உருவில் சிரஞ்சீவியாக்கித் தரும் பரமபாக்கியம் வானதி உரிமையாளர் ஸ்ரீ திருநாவுக்கரசுக்குக் கிட்டியிருக்கி றது. இந்நூலைத் தம் பதிப்பகத்தால் கொண்டுவர வேண்டும் என்பதில் அவர் காட்டிய அந்தரங்க ஈடுபாடு பலித்துவிட் டது. எத்தனையோ பதிப்பகத்தாருக்கு இந்த ஆசை இருந்தது. இப்பணியை ஏற்று நடத்த பல அற நிலையத்தினர் முன் வந்திருப்பர். எனினும் ஸ்ரீ திருநாவுக்கரசு அவர்களுக்கே 'லக்கி பிரைஸ்' விழுந்ததென்றால் காரணம் அவரது தவம் தான். வான் நதியை பகீரதன் தவத்தால் சங்கரன் சிரத்தில் கங்கையாகக் கொண்டு வந்ததுபோல், நம் சங்கரரின் வாக்கு கங்கையை வானதி நூலாகக் கொண்டு வந்துவிட்டது.

ஸ்ரீ திருநாவுக்கரசு செட்டிக்காரர். ஆரம்பத்திலேயே ஸ்ரீ ஜகத்குரு ஜயேந்திர ஸரஸ்வதி சங்கராசார்ய ஸ்வாமிகளின் அருளாசி பெற்றுவிட்டார். தொட்டதெல்லாம் தங்கமாக்கும் புதுப் பெரியவாளின் அநுக்கிரஹம் பெற்றபின் காரியம் பலிப்பதில் விந்தையென்ன?

அச்சகத்தார் மிக நல்ல முறையில் சிரத்தையுடன் அச்சிட்டிருக்கின்றார்கள். அவர்களுக்காகவும், பதிப்பகத்தாருக்காகவும் நான் வேண்டுவது இதேபோல இன்னொரு பாகம் ''தெய்வத்தின் குரல்'' அவர்கள் மூலமே வெளியாக வேண்டுமென்பதுதான்.

இதே அளவுக்கு இன்னொரு வால்யூம் கொண்டு வரவும் விஷயங்கள் உள்ளன என்ற நல்ல சமாசாரத்தை இங்கு வாசகர்கள் காதில் போடுகிறேன்.

இவ்வருள் வாக்குகளில் பெரும்பாலானவற்றை இதழ் தோறும் பிரசுரித்து வந்தவர்களும், இவற்றில் பலவற்றை எடுத்தெழுதுவதில் பேருதவி புரிந்த 'டேப்'களைத் தந்தவர்களுமான ''கல்கி'' நிறுவனத்தாருக்கு எப்போதுமே உள்ள ஆசாரியரின் அருளை நாமும் ''உபரி''யாக வேண்டிக்கொள்வோம். இதேபோல் ''காமகோடி ப்ரதீப'' ஸஞ்சிகை மூலமும், அநேக நூல்கள், டேப்கள் மூலமும் ஏராளமான அருள் வாக்குகளை அளித்துள்ள பி.ஜி.பால் கம்பெனியும் நம் நிறைந்த நன்றிக்குப் பாத்திரமாகிறது.

★ ★ ★

என் பெயரிலேயே சில புஸ்தகங்கள் எழுதியிருக்கிறேன். எழுதிக்கொண்டும் இருக்கிறேன். ஆதியில் பெரியவர்கள் வீசிய கடாக்ஷ விசேஷம் — எல்லாம் தெய்வ சம்பந்தமான விஷயங்களை வாசகர்களுக்கு நினைப்பூட்டுவதாகவே உள்ளன. இப்படி ஒரு நல்ல சேவை செய்யக் கிடைத்ததில் மகிழவே செய்கிறேன். ஆனாலும், என் பெயரில் வந்த, வரவிருக்கிற அந்த நூல்களை விட, இப்போது சாக்ஷாத் ஸ்ரீ பெரியவாள் பெயரில் வரும் இந்நூலைத் தொகுத்துத் தந்ததில்தான் மாபெரும் மகிழ்ச்சி, நிறைவு காண்கிறேன்.

வியாஸர் தாமே பதினெண் புராணங்கள் எழுதினார்; பிரம்ம ஸூத்திரம் எழுதினார்; ஐந்தாவது வேதம் எனப்பெறும் மஹாபாரதம் எழுதினார். ஆயினும் இவற்றை எல்லாம்விட அவருக்குப் பெருமை, ஸாக்ஷாத் ஸர்வேசுவரனே ஆதியில் அளித்திருந்த அனந்தமான வேதங்களைப் பிற்பாடு அவர் ஓரிடத்தில் தொகுத்து நூலாகத் தந்ததுதான். ''வியாஸர்'' என்ற பெயருக்கே ''தொகுப்பாசிரியர்'' என்றுதான் பொருள். அன்று வியாஸருக்கு அடித்த யோகம் அவரது அடித்துகளான ஒருவனுக்கு இன்று லபித்திருப்பதால், ஆறாவது வேதம் எனத்தக்க இந்நூலுக்குச் சிறியனான நான் தொகுப்பாசிரியனாக இருக்கிறேன். இங்கே என் பெயரைப் போட்டுக் கொள்ள வேண்டாம் என்றே முதலில் எண்ணினேன். பிறகு ஸ்ரீ பெரியவாளின் காரணமில்லாத பெருங்கருணை என்னவெல்லாம் செய்கிறது, அது எப்படி இருபதாண்டுகளுக்கு முன் உதவாக்கரையாகக் கிடந்த ஒருவனை இன்று அவரது மணி வாக்குகளையே தொடுத்து அம்பாள்மயமான அவர் பாதத்தில் சூட்டுமளவுக்குக் கொண்டு வந்திருக்கிறது என்பதை நாடறியவேண்டும் என்பதற்காகவே, பெயர் போட்டுக் கொள்ளத்தான் வேண்டும் எனத் துணிந்தேன்.

ஸ்ரீசரணர்களின் திவ்ய சரணங்களை நமஸ்கரித்து வாசகரனைவருக்கும் ஸகல மங்களங்களையும் பிரார்த்திக்கிறேன்.

சென்னை-53
29-2-76.
மஹா சிவராத்திரி

ரா. கணபதி

## ஒன்பதாம் பதிப்பு முகவுரை (1992)

பதினாறாண்டுகளுக்கு முன் எழுதிய முதற் பதிப்பின் முகவுரையில் மேலும் ஒரு பகுதி 'தெய்வத்தின் குரல்' தொகுத்துத் தர இயலுமென்று கூறியிருக்கிறேன். ஆனால் நடைமுறையில் மேலும் நான்கு பகுதிகள் தொகுத்துக் கொடுத்து, தற்போது ஐந்தாவதும் (அதாவது நூலின் ஆறாவது பகுதியும்) பெரும் பாகம் அச்சாகிவிட்டது. திருவருள் கூட்டிவைப்பின் இன்னும் சில பகுதிகளுங்கூட உருவாக்கித்

தரவிருக்கிறோம். ஒரே பகுதி என்றது இவ்வாறு பலவாகப் பெருகியதற்குக் காரணம் கூறக் கடமைப் பட்டிருக்கிறேன். எக்காரணத்தாலோ இதுவரை மனம் விட்டுக் கூறாத அக்கார ணத்தை இப்போது வெளியிட்டு மகிழ்கிறேன்:

1976-லேயே பல பகுதிகளுக்கான விஷயக் குறிப்புக்கள் கைவசம் இருந்தன. இம் முதற் பகுதியில் முக்காலே மூன்று வீசத்துக்கும் அதிகமாக ஸ்ரீ சரணர்களின் மூல மொழியையே கொடுத்திருப்பது போலின்றி, முக்கால்தான் அவர் மொழி, மீதி ஆய்ந்தோய்ந்து கண்டுபிடித்துத் தொகுப்பாசிரியனே சேர்க்க வேண்டும் என்ற ரகமாகவே குறிப்புக்களில் பெரும் பாலானவை இருந்தன. அச்சமயத்தில் 1980-குள் என் எழுத்துப் பணி நின்றுவிடும் என்ற எண்ணத்தில் இருந்தேன். அதற்குள் முடித்துத் தர வேண்டிய வேறு சில 'கமிட்மென்ட்' களும் இருந்ததால், ''தெய்வத்தின் குர''லுக்குப் பயன்படக் கூடிய குறிப்புக்களில் முற்றிலுமோ, அல்லது மிகப் பெரும் பகுதியோ மூல ரூபத்திலேயே கிடைத்திருப்பதைக் கொண்டு மேலும் ஒரு பகுதி மட்டும் உருவாக்கித் தந்து 'நிப்பாட்டி' விடலாமென்று எண்ணினேன். அவ்வாறே முகவுரையி லும் தெரிவித்தேன். தெய்வ ஸங்கல்பம் வேறு விதமாய் இருந்து 1980-க்குப் பன்னீராண்டுகள் பிறபட்டு இன்றளவும் எழுத்துப் பணி தொடர்ந்திருக்கிறது. அரைகுறைகளையும் எப்படியேனும் பூர்த்தி செய்து தரவேண்டும் என்ற உத்ஸாஹ மும் பிறந்து, திருவருளும் அற்புதமாகக் கை கொடுத்து, பல பகுதிகளைப் பிறப்பித்துவிட்டது. புதிது புதிதாகவும் இந்த இடைக் காலத்தில் ஏராள விஷயம் சேகரிக்கப்பட்டு, இன் னும் சில பகுதிகளை உருவாக்கவும் சரக்குச் சேர்ந்துள்ளது. ஸத்குருநாதனின் தன்னிகரில்லாத நிறைமொழி பரவுவதில் கருவியாகும் பாக்கியம் தொடர்கிறது.

சென்னை-17
19-12-92.

**ரா. கணபதி**

# பொருளடக்கம்

பொருள் பக்கம்

## மதம்



## வைதிக மதம்

| பொருள் | பக்கம் |
|---|---|

# விநாயகர்

தமிழ் நாட்டின் தனிப்பட்ட சிறப்பு எங்கு பார்த்தாலும் பிள்ளையார் கோயில்கள் இருப்பதேயாகும். ''கோயில்'' என்று பெயர் வைத்து விமானமும் கூரையும் போட்டுக் கட்டிடம் எழுப்ப வேண்டும் என்பதுகூட இல்லாமல், அரச மரத்தடிகளிலேகூட வானம் பார்க்க அமர்ந்திருக்கும் ஸ்வாமி நமது பிள்ளையார். தெருவுக்குத் தெரு ஒரு பிள்ளையார் கோயில், நதிக் கரைகளிலெல்லாம் பிள்ளையார், மரத்தடிக ளில் பிள்ளையார் என்றிப்படி இந்தத் தமிழ் தேசம் முழுவதும் அவர் வேறெந்த ஸ்வாமிக்கும் இல்லாத அளவுக்கு இடம் கொண்டு அருள் பாலித்து வருகிறார். அவரைப் ''பிள்ளை யார்'' என்றே அன்போடு கூறுவது நம் தமிழ்நாட்டுக்கே உரிய வழக்கம். சர்வலோக மாதா பிதாக்களாகிய பார்வதி பரமேசுவரர்களின் ஜேஷ்ட புத்திரர் அவர். ''பிள்ளை'' என்றால் அவரைத்தான் முதலில் சொல்லவேண்டும். வெறுமே ''பிள்ளை'' என்று சொல்லக்கூடாது என்பதால் மரியாதையாகப் ''பிள்ளையார்'' என்று சொல்வது தமிழ்நாட் டுச் சிறப்பு.

''குமாரன்'' என்றால் ''பிள்ளை'' என்றே அர்த்தம். பாரததேசம் முழுவதிலும் குமாரன், குமாரஸ்வாமி என்றால் பார்வதி பரமேசுவரர்களின் இளைய பிள்ளையாகிய சுப்பிரம ணியரையே குறிப்பிடும். தமிழிலும் ''குமரக் கடவுள்'' என்கிறோம். ஆனால், அவரைக் ''குமரனார்'' என்பதில்லை; ''குமரன்'' என்றுதான் சொல்வார்கள். மூத்த பிள்ளைக்கே மரியாதை தோன்றப் பிள்ளையார் என்று பெயர் தந்திருக்கி றோம்.

முதல் பிள்ளை இவர்; குழந்தை ஸ்வாமி. ஆனாலும் இவரே எல்லாவற்றுக்கும் ஆதியில் இருந்தவர். பிரணவம் தான் எல்லாவற்றுக்கும் முதல். பிரணவத்திலிருந்துதான் சகல பிரபஞ்சமும் ஜீவராசிகளும் தோன்றின. அந்தப் பிரணவத்தின் ஸ்வரூபமே பிள்ளையார். அவரது ஆனைமுகம், வளைந்த தும்பிக்கை இவற்றைச் சேர்த்துப் பார்த்தால் பிரணவத்தின் வடிவமாகவே தோன்றும்.

குழந்தையாக இருந்துகொண்டே ஆதிமுதலின் தோற்றமாக இருக்கிற பிள்ளையார் குழந்தைபோல் தோன்றினாலும், பக்தர்களை ஒரேயடியாகத் கைதூக்கி உயர்த்தி விடுவதிலும் முதல்வராக இருக்கிறார். ஔவைப் பாட்டி ஒருத்தியின் உதாரணமே போதும். ஔவையார் பெரிய கணபதி உபாஸகி. பிரணவ ஸ்வரூபியான விநாயகரைப் புருவமத்தியில் தியானித்துக் கொண்டு, ஔவையார் யோக சாஸ்திரம் முழுவதையும் அடக்கியதான ''விநாயகர் அகவலை''ப் பாடியிருக்கிறாள். அதைப் பாராயணம் செய்தால் பரமஞானம் உண்டாகும். இந்த ஔவையாரைப் பற்றி ஒரு கதை உண்டு. சுந்தரமூர்த்தி ஸ்வாமிகளும் சேரமான் பெருமாள் நாயனாரும் கைலாசத்துக்குப் புறப்பட்டார்கள். அவர்கள் ஔவையையும் உடன் அழைத்துப் போக எண்ணினார்கள். அப்போது ஔவை விக்நேசுவரருக்குப் பூஜை பண்ணிக் கொண்டிருந்தாள். சீக்கிரம் பூஜையை முடித்துத் தங்களுடன் கைலாசத்துக்கு வருமாறு சுந்தரமூர்த்தியும் சேரமானும் அவளை அவசரப்படுத்தி அழைத்தார்கள். அவளோ, ''நீங்கள் போகிறபடி போங்கள். உங்களுக்காக நான் என் பூஜையை வேகப்படுத்த மாட்டேன். விநாயக பூஜையே எனக்குக் கைலாசம்'' என்று சொல்லி விட்டாள். அவர்கள் அப்படியே கிளம்பி விட்டார்கள். ஔவை சாங்கோபாங்கமாகப் பூஜை செய்து முடித்தாள். முடிவில் பிள்ளையார் பிரசன்னமாகி அவளை அப்படியே தம் துதிக்கையால் தூக்கி ஒரே வீச்சில் கைலாசத்தில் கொண்டு சேர்த்துவிட்டார்! அவளுக்குப் பிற்பாடுதான் சுந்தரமூர்த்தியும் சேரமான் பெருமாளும் கைலாசத்தை அடைந்தார்கள்.

அங்கே சேரமான் பெருமாள் திருக்கைலாய ஞான உலாவைப் பாடினார். இதை அருணகிரிநாதர் திருப்புகழில்,

> **ஆதரம் பயில் ஆரூரர் தோழமை**
> **சேர்தல் கொண்டவரோடே முனாளினில்**
> **ஆடல் வெம்பரி மீதேறி மா கயிலையிலேகி**
> **ஆதி அந்த உலா ஆசு பாடிய**
> **சேரர்...**

என்பதில் சொல்லாமல் சொல்கிறார். ''அப்படிப்பட்ட சேரர் ஆண்ட கொங்கு தேசத்தில் உள்ள பழனியில் இருக்கிற பெருமாளே'' என்று பழனியாண்டவனைப் பாடுகிறார். சுந்தரரும், சேரமான் பெருமாள் நாயனாரும் கைலாசம் சேர்ந்ததற்கு இப்படி குமாரஸ்வாமியின் சம்பந்தத்தை உண்டாக்குகிறார். மூத்த குமாரரான பிள்ளையாருக்கோ ஏற்கெனவே அந்த சம்பவத்தில் சம்பந்தம் இருக்கிறது. அந்த இரண்டு பேருக்கும் முன்னதாக, ஒரு சொடக்குப் போடுகிற நாழிகைக்குள் அவர் ஔவைப் பாட்டியைக் கைலாசத்தில் சேர்த்துவிட்டார். பெரிய அநுக்கிரகத்தை அநாயாசமாகச் செய்கிற ஸ்வாமி விக்நேசுவரர்.

## தத்துவமயமான விநாயகர்

விநாயக மூர்த்தியிலுள்ள ஒவ்வொரு சின்ன சமாசாரத்தைக் கவனித்தாலும் அதில் நிறையத் தத்துவங்கள் இருக்கின்றன.

பிள்ளையாருக்குத் தேங்காய் உடைப்பது எதற்காக? விக்நேசுவரர், தம் அப்பாவான ஈசுவரனைப் பார்த்து' ''உன் சிரசையே எனக்குப் பலி கொடு'' என்று கேட்டு விட்டாராம். எல்லாவற்றையும் காட்டிலும் உயர்ந்தது எதுவோ அதைத் தியாகம் பண்ணினால்தான் மகா கணபதிக்குப் பிரீதி ஏற்படுகிறது. அவ்வளவு பெரிய தியாகம் பண்ணுவதற்குத் தயார் என்ற அறிகுறியாகத்தான், ஈசுவரனைப்போலவே மூன்று கண்கள் உடைய தேங்காயைச் சிருஷ்டித்து அந்தக் காயை அவருக்கு நாம் அர்ப்பணம் பண்ணும்படியாக ஈசுவரன் அநுக்கிரகித்திருக்கிறார்.

சிதறு தேங்காய் என்று உடைக்கிற வழக்கம் தமிழ் தேசத்துக்கு மட்டுமே உரியது. இப்படிச் சிதறிய துண்டங்கள் யாருக்கு உரிமை என்றால் குழந்தைகளுக்குத்தான். இந்த உண்மை ஒரு குழந்தை மூலமாகத்தான் எனக்கே தெரிந்தது. அப்போது (1941) நான் நாகைப்பட்டினத்தில் சாதுர்மாஸ்ய விரதம் அநுஷ்டித்து வந்தேன். அங்கே கோயிலில் பிள்ளையாருக்கு நிறையச் சிதறுகாய் போடுவது வழக்கம். காயை உடைக்கவே இடம் கொடுக்காத அளவுக்குக் குழந்தைகள் ஒரே நெரிசலாகச் சேர்ந்துவிடும். திபுதிபு என்று அவை ஓடி வருவதில் என்மேல் விழுந்துவிடப் போகின்றனவே என்று என்கூட வந்தவர்களுக்குப் பயம். அவர்கள் குழந்தைகளிடம்

''இப்படிக் கூட்டம் போடாதீர்கள், விலகிப் போங்கள்'' என்று கண்டித்தார்கள். அப்போது ஒரு பையன் 'டாண்' என்று, ''பிள்ளையாருக்குத் தேங்காய் போட்டுவிட்டு, அப்பு றம் எங்களை இங்கே வராதீர்கள் என்று சொல்ல உங்களுக்கு என்ன பாத்தியதை இருக்கிறது? சிதறுகாய் போட்டால் அது எங்கள் பாத்தியதைதான். அதை எடுத்துக் கொள்ள நாங்கள் வரத்தான் செய்வோம்'' என்றான். அவன் பேசிய ஜோர், அதிலிருந்த உறுதியைப் பார்த்தபோதுதான் எனக்கே, 'வாஸ் தவம்தான், குழந்தை ஸ்வாமியின் பிரஸாதத்தில் குழந்தைக ளுக்குத்தான் முழு பாத்தியதையும்' என்று தெரிந்தது.

அகங்கார மண்டையோட்டை உடைத்தால் உள்ளே அமிருத ரஸமாக இளநீர் இருப்பதை இந்தச் சிதறுகாய் உணர்த்துகிறது.

கணபதியைக் காட்டிலும் சரீரத்தில் பருமனான ஸ்வாமி வேறு யாரும் இல்லை. சிரசு யானையின் தலை. பெரிய வயிறு. பெரிய உடம்பு. அவருக்கு 'ஸ்தூல காயர்' என்றே ஒரு பெயர். மலைபோல் இருக்கிறார். ஆனாலும் அவர் சின்னக் குழந்தை! சரி, குழந்தைக்கு எது அழகு? குழந்தை என்றால் அந்தப் பருவத்தில் நிறையச் சாப்பிட வேண்டும். உடம்பு கொஞ்சம்கூட இளைக்கக்கூடாது. ஒரு சந்நியாசி நிறையச் சாப்பிட்டுக் கொண்டு பெரிய சரீரியாக இருந்தால் அது அவருக்கு அழகல்ல. வயசாகிவிட்டால் ராத்திரி உபவா சம் இருப்பார்கள். குழந்தை அப்படி இருப்பது அழகா? குழந்தை என்றால் தொந்தியும் தொப்பையுமாகக் கொழு கொழுவென்று இருந்தால்தான் அழகு. நிறையச் சாப்பிடுவது தான் அழகு. குழந்தைகள் நல்ல புஷ்டியாக இருக்க வேண் டும் என்பதை இந்தக் குழந்தைச்சாமியே காட்டிக் கொண்டி ருக்கிறார், கையில் மோதகத்தை வைத்துக்கொண்டு.

இவரோ யானை மாதிரி இருக்கிறார். அதற்கு நேர் விரோதமான சின்னஞ்சிறு ஆகிருதி உடையது மூஞ்சூறு. இதை அவர் தம் வாகனமாக வைத்துக் கொண்டிருக்கிறார். மற்ற ஸ்வாமிகளுக்காவது ஒரு மாடு, ஒரு குதிரை, ஒரு பட்சி

என்று வாகனம் இருக்கிறது. இவரோ தாம் எத்தனைக்கு எத்தனை பெரிய ஸ்வாமியாக இருக்கிறாரோ, அத்தனைக்கு அத்தனை சின்ன வாகனமாக வைத்துக் கொண்டிருக்கிறார். சுவாமி எதை வாகனமாக வைத்துக் கொண்டாலும் வாகனத் தினால் சுவாமிக்குக் கௌரவம் இல்லை. சுவாமியால்தான் வாகனத்துக்கும் கௌரவம். வாகனத்துக்குக் கௌவரம் கொடுக்க, அதனுடைய சக்திக்கு ஏற்றபடி நெட்டிப் பிள்ளை யார் மாதிரியாகக் கனம் இல்லாமல் இருக்கிறார். அதற்குச் சிரமம் இல்லாமல், ஆனால் அதற்கு மரியாதை, கௌரவம் எல்லாம் உண்டாகும்படியாகத் தம் உடம்பை வைத்துக் கொண்டிருக்கிறார். ஸ்தூலகாயரான போதிலும், 'பக்தர்கள் இருதயத்தில் கனக்காமல் லேசாக இருப்பேன்' என்று காட்டு கிறார்.

ஒவ்வொரு பிராணிக்கும் ஒவ்வோர் அங்கத்தில் அதிகக் கௌரவம் இருக்கும். சவுரிமான் (கவுரிமான்) என்று உண்டு. அதன் கௌரவம் வாலில். மயில் என்றால் அதற்குத் தோகை விசேஷம். தோகையை மயில் ஜாக்கிரதையாக ரட்சிக்கும். யானை எதை ரட்சிக்கும்? தன் தந்தத்தைத் தீட்டி வெள்ளை வெளேர் என்று வைத்திருக்கும். இந்தப் பிள்ளையார் என்கிற யானை என்ன பண்ணுகிறது என்றால், அந்தக் கொம்பில் ஒன்றையே ஒடித்து, அதனால் மகாபாரதத்தை எழுதிற்று. தன் அழகு, கௌரவம், கர்வம் எல்லாவற்றுக்கும் காரணமாக இருக்கிற ஒன்றைக் காட்டிலும், தர்மத்தைச் சொல்கிற ஒன்று தான் பெரிது என்பதை இவ்விதம் இந்த யானை காட்டியது. நியாயத்துக்காக, தர்மத்துக்காக, விந்தைக்காக எதையும் தியா கம் பண்ண வேண்டும் என்பதைத்தானே தந்தத்தைத் தியாகம் பண்ணிக் காட்டியிருக்கிறது. ஸ்வாமிக்குக் கருவி என்று தனியாக ஒன்றும் வேண்டியதில்லை. எதையும் கருவியாக அவர் நினைத்தால் உபயோகித்துக் கொள்வார் என்பதற்கும் இது உதாரணம். ஒரு சமயம் தந்தத்தாலேயே அசுரனைக் கொன்றார். அப்போது அது ஆயுதம். பாரதம் எழுதும் இப்போது அதுவே பேனா.

நமக்குப் பார்க்கப் பார்க்க அலுக்காத வஸ்துக்கள் சந்திரன், சமுத்திரம், யானை ஆகியன. இவற்றையெல்லாம் எத்தனை தடவை, எத்தனை நேரம் பார்த்துக் கொண்டிருந்தாலும், அலுப்புச் சலிப்பில்லாத ஆனந்தம் பொங்கும். அதனால்தான் குழந்தைஸ்வாமி தன்னைப் பார்க்கிற ஜனங்களுக்கு எல்லாம், பார்க்கப் பார்க்க ஆனந்தம் எப்போதும் பொங்கிக் கொண்டிருக்கும்படியாக யானை உருவத்தோடு இருக்கிறார். அது ஆனந்த தத்துவம்; ஆராத ஆசையின் தத்துவம். அவர் பிறந்ததே ஆனந்தத்தில். பண்டாசுரன் விக்ன மந்திரங்களைப் போட்டு அம்பாளின் படை தன்னை நோக்கி வரமுடியாதபடி செய்தபோது, பரமேசுவரன் அவளை ஆனந்தமாகப் பார்த்தபோது, அவளும் ஆனந்தமாக இந்தப் பிள்ளையைப் பெற்றாள். அவர் விக்னயந்திரங்களை உடைத்து அம்மாவுக்கு சகாயம் செய்தார்.

அவர் பார்வதி பரமேஸ்வரர்களுக்குப் பிள்ளை. இந்த உலகத்துக்கே மூலத்திலிருந்து ஆவிர்ப்பவித்ததனால், அவரை நாம் ''பிள்ளையார்'', ''பிள்ளையார்'' என்றே விசேஷித்து அழைக்கிறோம்.

எந்த ஸ்வாமியை உபாஸிப்பதானாலும் முதலில் விநாயகருடைய அநுக்கிரகத்தைப் பெற்றுக் கொண்டால்தான் அந்தக் காரியம் விக்கினம் இல்லாமல் நடைபெறும். அவரையே முழுமுதற் கடவுளாக, பிரதான மூர்த்தியாக வைத்து உபாசிக்கிற மதத்துக்கு காணபத்தியம் என்று பெயர்.

பிள்ளையாருக்கு எதிரே நின்று தோப்புக்கரணம் போடுகிறோமே, அதை நமக்கு எல்லாம் சொல்லிக் கொடுத்தவர் மஹாவிஷ்ணுதான் என்று ஒரு கதை இருக்கிறது. ஒரு சமயம் மஹாவிஷ்ணுவினுடைய சக்கரத்தை அவரது மருமகனான பிள்ளையார் விளையாட்டாகப் பிடுங்கிக் கொண்டு தம் வாயில் போட்டுக்கொண்டு விட்டாராம். பிள்ளையாரிடமிருந்து திரும்பப் பிடுங்குவது முடியாது. அவர் மிகவும் பலம் உடையவர். அதட்டி மிரட்டி வாங்கவும் முடியாது. ஆனால், அவரைச் சிரிக்க வைத்துச் சந்தோஷத்தில் அவர் வாயிலிருந்து

சக்கரம் கீழே விழுந்தால் எடுத்துக்கொண்டு விடலாம் என்று மஹாவிஷ்ணுவுக்குத் தோன்றியதாம். உடனே நான்கு கைகளாலும் காதுகளைப் பிடித்துக் கொண்டு ஆடினாராம். விநாயகர் விழுந்து விழுந்து சிரித்தார். சக்கரம் கீழே விழுந்தது. விஷ்ணு எடுத்துக் கொண்டு விட்டார்.

''தோர்பி: கர்ணம்'' என்பதே தோப்புக்கரணம் என்று மாறியது. ''தோர்பி'' என்றால் ''கைகளினால்'' என்று அர்த்தம். 'கர்ணம்' என்றால் காது. ''தோர்பி கர்ணம்'' என்றால் கைகளால் காதைப் பிடித்துக் கொள்வது.

விக்நேசுவரருடைய அநுக்கிரகம் இருந்தால்தான் லோகத்தில் எந்தக் காரியமும் தடையின்றி நடக்கும். தடைகளை நீக்கிப் பூரண அநுக்கிரகம் செய்கிற அழகான குழந்தைத் தெய்வம் பிள்ளையார். அவரைப் பிரார்த்தித்து, பூஜை செய்து, நாம் விக்கினங்கள் இன்றி நல்வாழ்வு வாழ்வோமாக!

# ஸ்வாமி நாமா?
# இல்லை என்றால்...?

ஜீவனும் பிரம்மமும் ஒன்றுதான் என்கிறார் ஸ்ரீ ஆதி சங்கர பகவத்பாதர்கள். அதாவது நாமேதான் ஸ்வாமி என்கிறார். ''நான்தான் ஸ்வாமி'' என்றுதான் ஹிரண்யகசிபுவும் சொன்னான். அவனை ஸ்வாமியே நரசிம்மமாக வந்து சம்ஹாரம் செய்யும்படி ஆயிற்று. ஆசார்யாள், ''நாம்தான் ஸ்வாமி'' என்று சொல்வது ஹிரண்யகசிபு சொன்னது போலவா?

இல்லவே இல்லை. ''நான்தான் ஸ்வாமி'' என்று ஹிரண்யகசிபு சொன்னபோது தன்னைத் தவிர வேறு ஸ்வாமியே கிடையாது என்ற அகங்காரத்தில் சொன்னான். பகவத்பாதர்களோ ஸ்வாமியைத் தவிர வேறு எதுவுமே கிடையாது என்பதால் நாமும் ஸ்வாமிதான் என்கிறார். ஜீவன் தனக்கு உள்ள அகங்காரத்தை அடியோடு விட்டு விட்டால் இவனே பிரம்மத்தில் கரைந்து பிரம்மமாகி விடுகிறான் என்கிறார். இப்போது நாம் உத்தரணி ஜலத்தைப்போல் கொஞ்சம் சக்தியுடன் இருக்கிறோம். ஸ்வாமி அகண்ட சக்தியுடன் சமுத்திரமாக இருக்கிறார். அந்தச் சமுத்திரத்திலிருந்துதான் இந்த உத்தரணி ஜலம் வந்தது. இந்த உத்தரணி ஜலம், தான் தனி என்கிற அகங்காரத்தைக் கரைத்து சமுத்திரத்தில் கலந்து சமுத்திரமே ஆகிவிட வேண்டும்.

நாம் ஸ்வாமியாக இல்லாவிட்டால், ஸ்வாமியைத் தவிர வேறான ஒன்றாக இருக்க வேண்டும். அவ்வாறெனில் பரமாத்மாவுக்கு வேறான வஸ்துக்களும் உண்டு என்றாகிவிடும்.

அதாவது, பல வஸ்துக்களில் பரமாத்மாவும் ஒன்று என்றாகி விடும். அவருடைய சம்பந்தமில்லாமல் அந்தப் பல வஸ்துக் கள் உண்டாகி இருக்கின்றன என்றாகும். இப்படி இருப்பின் அவர் பரமாத்மா, ஸ்வாமி என்பதே பொருந்தாதே! எல்லா மாக ஆன ஒரே சக்தியாக இருக்கிற மட்டும்தானே அவர் ஸ்வாமி! எல்லாம் அவர் என்னும்போது நாம் மட்டும் வேறாக இருக்க முடியுமா? எனவே, 'ஸ்வாமியே நாம்' என்று வெளிப் பார்வைக்கு அகங்காரமாகப் பேசுகிற அத்வை திகள், ஸ்வாமியின் மகிமையைக் குறைக்கவில்லை. மாறாக, 'ஜீவன் ஸ்வாமி அல்ல; இவன் அல்பன், அவர் மகா பெரிய வஸ்து; இவன் வேறு; அவர் வேறு' என்று அடக்கமாகச் சொல்கிறவர்கள்தான், தாங்கள் அறியாமலே அவரைப் பல சாமான்களில் ஒன்றாக்கி அவருடைய மகிமையைக் குறைத்து விடுகிறார்கள். அவரே சகலமும் என்றால் நாமும் அவராகத் தான் இருந்தாக வேண்டும்.

சமுத்திரமாக இருக்கிற அவரேதான் ஆற்று ஜலம், குளத்து ஜலம், கிணற்று ஜலம், அண்டா ஜலம், செம்பு ஜலம், உத்தரணி ஜலம்போல் தம் சக்தியைச் சிறுசிறு ரூபங்களாகச் செய்துகொண்டு பலவித ஜீவ ஜந்துக்களாகியிருக்கிறார். இதில் மனிதனாகும்போது பாப புண்ணியத்தை அனுபவிக்க வும், பாப புண்ணியம் கடந்த நிலையில் தாமே ஆகிவிடவும் வழி செய்திருக்கிறார். மனிதனாகும்போது மனசு என்ற ஒன்றைக் கொடுத்து அதைப் பாப புண்ணியங்களில் ஈடுபடுத் திப் பலனை அனுபவிக்கச் செய்கிறார்.

மனசு ஆடிக் கொண்டேயிருக்கிற நிலையில் உள்ள நாம் எடுத்த எடுப்பில் பாப புண்ணியமற்ற நிலையை அடைந்து, அவரே நாம் என்று உணர முடியாது. ஆகவே, அவரே நாமாக இருந்தாலும், அதை நாம் 'அனுபவத்தில் உணருவதற்கு அவரது அருளைப் பிரார்த்திக்க வேண்டியவர்களாகவே இருக்கிறோம். அவர் மகா பெரிய ஸ்வாமி, நாம் அல்ப ஜீவன்—அவர் மகா சமுத்திரம், நாம் உத்தரணி ஜலம் என்கிற

எண்ணத்தோடு ஆரம்பத்தில் பக்தியே செய்ய வேண்டியவர்க ளாக இருக்கிறோம்.

ஸ்வாமி கொடுத்துள்ள மனசுதான் இப்போது நம்மை அவரிடமிருந்து பேதப்படுத்துகிறது. இந்த மனசை எடுத்த எடுப்பில் போ என்றால் போகாது. ஆகவே, இந்த நிலையில் இதே மனசால் அவர் ஒருத்தரை மட்டும் பற்றிக் கொள்ள வேண்டும். மனசை அவர் குரங்காகப் படைத்திருக்கிறார். அந்தக் குரங்கு இப்போது தேகத்தைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டிருக்கிறது. ஆனால், ஸ்வாமி இந்தத் தேகத்தை நசிப்பதாக அல்லவா வைத்திருக்கிறார்? இந்த அழுகல் பழத்தை மனக்குரங்கு விட்டுவிட வேண்டும். அழுகாத பழம் கிடைத்தால் அழுகல் பழத்தைக் குரங்கு போட்டுவிடும். அழுகாத மதுரமான பழம் பரமாத்மாதான். அதை மனத்தால் பிடித்துக்கொண்டு சரீரப் பிரக்ஞையை விட்டுவிட அப்பிய சிக்க வேண்டும். இதற்குத்தான் பக்தி, பூஜை, க்ஷேத்திராட னம் எல்லாம் வைத்திருக்கிறது. இவற்றில் மேலும் மேலும் பக்குவமடைந்து சரீரப் பிரக்ஞை, அகங்காரம் அடியோடு போய்விட்டால், அவர் பரமாத்மா, நாம் ஜீவாத்மா என்கிற பேதமே போய், அவரே நாமாக, அத்வைதமாக ஆகிவிடு வோம். 'நீ வேறெனாதிருக்க, நான் வேறெனாதிருக்க' என்று அருணகிரிநாதர் பாடிய அனுபவத்தை அடைவோம்.

